Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 32—No. 7



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்கட னடியேனையுந் தாங்குதல்
என்கட னபணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி ஆடி 1959 ஜூலை | இதழ் 7

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

# தொண்டை நாட்டுத் தலயாத்திரை

சென்னை தருமபுர ஆதீன மடாலய தேவாலயப் பிரசார நிலையத்தின் மாதாந்தரப் பிரசாரக் கூட்டம் அச்சிறுபாக்கத்தில் 5—7—59-ல் நடைபெற்றது. இதற்கு முன் மாதங்களில் திருமுல்லைவாயில், திருவேற்காடு என்ற தலங்களில் ஆலய வழிபாடும் சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன. இம்மாதம் தொண்டை நாட்டுப் பாடல்பெற்ற பதியான திரு அச்சிறுபாக்கத்தில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. சென்னையிலிருந்து சுமார் முப்பது அன்பர்கள் கலந்துகொண்டார்கள். பிரசார நிலையத் தலைவர் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் முதலியோரை அச்சிறுபாக்கம் கோயில் தருமகர்த்தர் முதலியோர் பூர்ண கும்பத்துடன் வரவேற்றனர். அன்று நண்பகல் ஆலய வழிபாடு நடந்தது. மாலை 4-மணிக்கு அவ்வூரிலிருந்து சுமார் 3 கல் தொலைவிலுள்ள திருப்புகழ்ப் பாடல்பெற்ற தலமான பெரும்பேறு என்ற ஊரின் மலைமேலுள்ள முருகன் கோயிலில் வழிபாடாற்றச் சென்றனர். ஊரின் முகப்பில் சுவாமிகள் முதலியோரைக் கோயில் தருமகர்த்தர், நிர்வாக அதிகாரி முதலியோர் பூர்ணகும்பத்துடன் வரவேற்றனர். மலைமேல் முருகன்கோயில் வழிபாடும், பிறகு அடிவாரத்திலுள்ள ஈசுவரன் கோயில் வழிபாடும் நடைபெற்றன. பிரசார நிலையக் குழுவினரால் திருப்புகழ்ப் பாராயணம் நடைபெற்றது. சிற்றுண்டிக்குப் பின் அச்சிறுபாக்கம் திரும்பினர். ஆட்சிநாதர் கோயிலில் மாலை 6 மணிக்கு ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் திருவாளர்கள் சுப்பிரமணியன், நடராஜன், ஜி. கலியாணம்,எம்.ஏ., புலவர் முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்., ச. சிவகுமாரன் எம்.ஏ., நே. த. கிருஷ்ணசாமி பி.ஏ., பி.டி., திருமதி இராஜரத்தினம் அம்மையார், எம்.ஏ., எல்.டி., முதலியோர் சொற்பொழிவாற்றினார்கள். சுவாமிகளின் தலைமையுரையின் பின், திரு. வி. வரதா ரெட்டியார் பி.ஏ., பி.எல்., அவர்கள் நன்றி கூறினார்கள். கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இரவு 10-30 மணிக்கு இனிது முடிந்தது. கூட்டம் நடத்துவதற்கும், உணவு முதலிய வசதிகளுக்கும் தருமகர்த்தர் திரு. வீரா ரெட்டியார், திரு. கே. வி. இலட்சுமிபதி ரெட்டியார், பெரும்பேறு - திரு. பெரியசாமி செட்டியார் இவர்கள் ஏற்பாடு செய்திருந்தது பெரிதும் பாராட்டத்தக்கது. அடுத்த

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாரியையுள் நாடு

மலர் 32 | விகாரி ஆடி 1959 ஜூலை | இதழ் 7

## சிவன் என் மருத்துவன்*

(வெண்பா)

மருத்துவர்கள் வாழ மருந்தளித்து நஞ்சைத்
திருத்தியமு தாக்கும் சிவனென் — மருத்துவனென்
செய்திதனை எல்லார்க்கும் தேற்றுவன் சிந்தாக்
கைதிகழ்வல் லானையுளம் கண்டு.

திருப்புத் தூரிற் றிருத்தளி யின்கணே
    திருமுறை விழவிற் றிரள் அன்பரே!
விருப்புற் றுச்செவி சாய்த்தருள் செய்விரேல்,
    விளம்பு வேன்ஒரு பேருண்மை அன்பினால்;
கருப்புக் குத்துயர்ப் பட்டுப் பிறந்துபொய்க்
    காய மாயத் தழுந்தித் தளர்ந்துபின்
மரிப்புற் றுச்சுழல் வன்பிணி நீக்கிட
    வல்ல வன்சிவன் என்னும் மருத்துவன்! (1)

---

*இது திருப்புத்தூர்த் திருமுறை விழாவில் சிவத்திரு. குன்றக்குடி அடிகளார் திருவுளப் பாங்கின்படி 20-5-59 அன்று சிறப்புற நிகழ்ந்த கவியரங்கின்கண், அதற்குத் தலைமை தாங்கிய சமாஜப் பேரன்பர் கவியரசு - கோவை - திரு. கு. நடேச கவுண்டர் அவர்கள் பாடியது. உலகியற் செய்திகள், சாத்திரக் கருத்துக்கள், திருமுறைத் தொடர்கள், அரிய சொல்லமைப்புகள், உருவக முதலிய அணிநலம், இனிய செய்யுள் இயற்றுந்திறன், சிவபக்திச் சிறப்பு முதலியன இப் பாடல்களிற் சிறந்து விளங்கக் காணலாம். —முருகவேள்.

அன்ன வன்றன் அருளிற் கொடும்பிணி
அகன்றுய்ந் தாருக் களவுமுண் டாங்கொலோ ?
இன்ன நாளினும் எத்தனை யாருயிர்
ஏற்ற வாறவன் செய்யுஞ் சிகிச்சையால்,
பன்ன வும்அரி தாகிமுன் சென்மத்தில்
பண்ணு தீவினை பற்றி நலிந்திடும்
இன்னல் நோய்கள் அகன்றுவாழ் கின்றனர் !
என்ப தோர்ந்து வியப்பர் அறிவுளோர். (2)

கஞ்சப் பள்ளியில் வாணியன், வைகுண்டக்
கறுப்பக் கோன்,மைக் கடாத்தரு மன்,விசை
விஞ்சக் கார்விடு பொன்னய ராவதி
வேள்விக் கோன்,அள காபுரிச் செட்டி,அப்
பஞ்சப் பாணன் முதற்பல பேருமெப்
பாரு ளோருமிவன்கைச் சிகிச்சையே
நெஞ்சிற் கொண்டுயிர் வாழ்கின் றனர்என்றால்,
நிகர வற்குப் புகல்வதற் காருளார் ? (3)

ஆதி நாளில் அவன்செய் மருத்துவத்
தருமை தன்னை யறைகுவன் கேட்டிர்!ஓர்
சாதி யாளர் அனைவரும் பித்தர்,மேல்
சாவை யேதரும் நஞ்சையும் உண்டனர்,
ஏது மோர்செய லின்றிக் கிடந்தனர்,
இவரைக் கண்டிணை யில்லா அருளினல்
ஓது தத்துவ மென்ற கருவிகள்
உறுவித் தேகஞ் சிறக்கினன் என்பரால். (4)

அந்த நஞ்சின தாற்றல் எளியதோ ?
அவ்வப் போது கருவியைத் தாழ்த்துத்தான்
முந்திப் போல மயக்க முறுத்திடும்
முழுதும் நீங்க முறைப்படிப் பத்தியம்
சிந்தித் தேகடப் பாருக்குத் திருமா
செப்பி னனவன், சித்திபெற் றார்சிலர்,
பந்திக் கேயிணை யானவர் பத்தியம்
வழுவி யேதுயர் வாய்ப்படு கின்றனர். (5)

நஞ்சு நீக்கிய தன்றிப் பயித்தியம்
　　நாடி ஆதுலர் கேட்டை யாவகை
பஞ்ச மின்றிப்பல் லாதுலர் சாலைகள்
　　படைத்த வற்றில் அவரை யிருத்தினன்.
கொஞ்ச மல்ல அவர்க்குண வாதிகள்
　　கொடுப்ப தன்னவன், கொண்டு சிகிச்சையால்
உஞ்ச பேர்களு முண்டு! தருக்கினல்
　　உழலு வார்ஒறுப் புண்ணலும் உண்டரோ ! (6)

மருத்து வர்க்கும் மருத்துவ னதலால்
　　வாய்ந்த பேர்மகா தேவனென் றுகுமால் !
அருத்தி சேரும் **வைத்திய நாத**னென்று
　　அமரர் போற்றப்புள் ளூரி லமர்ந்தனன் !
வருத்திக் கூலி பெறுங்குணம் ஆங்கிலே,
　　வழுங்குங் காசினை வாங்குவ தேயலால்.
திருத்தி யென்று மூளானென்பர் தேர்ந்தபேர்.
　　திருத்தி யாள்வ தவன் அரு ளின்செயல் ! (7)

**மூல நோயினைத் தீர்க்கும் முதல்வனும்!**
　　முழுதுந் தீராத நோய்தீர்க்க வல்லனும் !
சால வீட்டும் வினையைத் தகர்ப்பனும் !
　　தன்னை யேயடை வார்க்குத் தருவனும் !
கோலந் தன்னையே போலக் கொடுப்பனும் !
　　குற்றம் செய்தவை முற்றும் பொறுப்பனும் !
ஞால மீதினில் எவ்வுருத் தொண்டர்கள்
　　நண்ணி னலுமே முன்னின் றருள்வனும் ! (8)

என்று, **நால்வர்** இசைத்தசொல் நம்பியே
　　ஏழை யேனும் சிவனென் மருத்துவன்
அன்றி யாரையும் பின்செல்கி லேன்என
　　அசைவி லாத உறுதி யடைந்தனென் !
நன்று நாடி நினைந்து குறையெலாம்
　　நவில லுற்றனென்! அன்னவன் என்னுளே
நின்று 'நம்பவன் நீயினி அஞ்சல்உன்
　　நினைவுக் கேற்ப அளிப்ப 'னென் றேதினன்.

பூதியென்ற மருந்து மெய்ப் பூசுவேன் ;
புண்ணி யத்திரு வைந்தெழுத் தாம்மறை
ஓதி யென் னுளத் துன் னுவன்; அன்னவன்
உரைத்த மார்க்கத் துறைப்பொ டொழுகுவேன்;
சாதி யாதி குறைகரு தாதவன்
சார்ந்த தொண்டரைச் சார்ந்து பணிகுவேன் ;
வாதி யாவினை இம்மை மறுமையும்
வருத்த மென்பது வந்தடை யாதரோ. (10)

எண்சீர் விருத்தம்

நாத னைப்புவ னங்களுக் கெல்லாம், நாவலூ
ரர்க்குத் தோழனை, யன்பார்
வாத வூரருக் கருள்செய் ஆசானை, வந்திக்
காகமண் சுமந்த சேவகனை,
மாதி னுக்கன்று தாயுமா னானை, வாழுயிர்க்
கின்பம் வழங்குகா தலனைத்,
தீது செய்பவப் பிணிமருந் தவனைத், திருப்புத்
தூரனைச் சென்றடை மனனே!

---

# வீடு பேற்றில் மலம் உண்டா ?

(முரு. பழ. இரத்தினம் செட்டியார்)

" முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅனு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பம் கொடுத்தலிறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப் பா." —மனவாசகம் கடந்தார்

இவ் வெண்பா சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்றாகிய, " உண்மை விளக்க "த்தில் உள்ளது. சித்தாந்த உலகில் மிகப் பெரிதும் ஆட்சியில் உள்ள செய்யுட்களில் இஃதும் ஒன்று. எனினும் இதற்கு உரை காண்பதில் அறிஞர்களிடையே ஒருமைப்பாடு இல்லை. இக்கட்டுரையின் நோக்கம் இதனை ஆராய்ந்து தக்கதொரு முடிபு காண்பதாகும்.

மேற்காட்டிய வெண்பா அமைந்து கிடந்தவாறே பொருள் சொல்வதென்றால், பின்வருமாறு கூறலாம்:— "முத்திப்பேற்றில் இறை, உயிர், ஆணவ மலம் ஆகிய மூன்று நித்தியப் பொருள்களும் எவ்வாறு உள்ளன என்பதைக் கூறுகிறேன்; கேட்பாயாக. பேரின்பத்தை ஆன்மா அநுபவித்துக்கொண்டிருக்கும்; இறைவன் அவ்வின்பத்தினை அதற்கு வழங்கிக்கொண்டிருப்பான்; ஆணவமலம் அவ்வின்பத்தினை விளைவித்துக்கொண்டிருக்கும்." இங்ஙனம் பொருள் கொள்ளும்போது, ஆணவமலம் பற்றிக் கூறுகின்ற இடத்தில் இடர்ப்பாடு வருகிறது. ஆன்மா, பேரின்பத்தை நுகரும் என்பதிலோ, இறைவன் அதனை வழங்குவான் என்பதிலோ கருத்து வேற்றுமை கொள்ளக் காரணமில்லை. துன்பங்கள் அத்தனைக்கும் மூலகாரணமாக உள்ள ஆணவமலம் இன்பத்தினை விளைவிக்கும் என்று சொன்னால் எங்ஙனம் ஒப்புக்கொள்ளுவது?

காலஞ் சென்ற சைவ சித்தாந்தப் பேரறிஞர் திரு. பொ. முத்தையபிள்ளை எழுதியுள்ள சிவஞான சித்தியார் உரையில், 'இத்தை விளைவித்தன் மலம்' என முத்தியினும் மலம் உண்டென்று சாதித்திருக்கவும், முத்தியில் மலம் நீங்குமென்றல் எவ்வாறு பொருந்துமெனின், துன்பத்தை விளைவிக்கும் மலம் இன்பத்தை விளைவிக்கமாட்டாது. இருள் ஒளியைச்செய்தல் எக்காலத்துமில்லையாதலின், மல நீக்கமே இன்பத்தை விளைவிக்கும் என்பதை இவ்வாறு கூறினராகையால் மலம் நீங்குமென்றல் பொருந்துமென்க; இச்செய்யுளில் இல்லை என்னும் உணர்வுக்கு விடயமாய் மலம் நின்றவாறறிக. ஆயினும் இல்லையென்று கூறவேண்டிய மலத்தை உண்டென்று கருதும் வண்ணம் கூறியது பொருந்துமோ எனின், சுருக்கிக் கூறவேண்டிய இடங்களில் அவ்வாறு கூறுதல் நூல் வழக்காதலின் பொருந்தும். இதனை, "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே யெடுப்பதூஉ மெல்லாம் மழை" என்னும் திருக்குறளானு மறிக. "மழை கெடுப்பதூஉம்" என்பதற்கு மழையின்மை கெடுப்பது பொருளாதல் போல, "மலம் இத்தை விளைவித்தல் என்பதற்கு மலமின்மை இத்தை விளைவித்தல் என்பது பொருளாதல் அறிக" என விரிவானதொரு விளக்கம் கூறியிருக்கிறார். இவ்வுரையினைப் படிக்

கும் பொழுதே, இது மிகவும் வலிந்து எழுதிய உரை என்பது புலனுகின்றது

ஆசிரியர் மனவாசகம் கடந்தார், " முத்திப் பேற்றில் மூன்று முதல்களையும் கூறுகிறேன் " என வெண்பாவைத் துவங்குவதிலிருந்தே, ஆண்டு முப்பொருளும் உண்டு என அவர் கருதுகிருர் என்பது நன்கு விளங்குகிறது. எனவே அவர் கருத்துக்கு ஏற்ப நாம் உரை செய்யாமல், " இந்தை விளைவித்தன் மலம் " என்று அவர் கூறியிருக்க, அதற்கு நேர்மாருக மலமின்மை எனப் பொருள்கொள்வது எவ்வாற்ருனும் பொருந்தாது. சுருங்கக் கூறுதல் நூல் வழக்காயினும் மயங்கக் கூறுதல் நூற் குற்றத்தினுள் ஒன்று. மேற்கோள் காட்டிய திருக்குறளில் இதுபோன்ற மயக்கம் இல்லை. " கெடுப்பதூஉம் " என்பதற்கு மறுதலைப் பொருளில் " எடுப்பதூஉம் " என்னும் சொல் வருகிறது. ஒன்றினுக் கொன்று மாருயுள்ள கேடும் ஆக்கமும் ஒரே குறளில் கூறப்படுவதால் மழையின்மை கெடுப்பதும் எனவும், மழை உண்மை எடுப்பதும் எனவும் பொருள்சொல்ல இடமிருக்கிறது. பரிமேலழகர், " மற்று வினைமாற்றின்கண் வந்தது ; ஆங்கு என்பது மறுதலைத் தொழிலுவமத்தின் கண் வந்த உவமச்சொல் " என இதற்கு இலக்கணக் குறிப்புக் காட்டுகிருர். இங்ஙனம் இலக்கணம் கூற இச்செய்யுளில் குறிப் பொன்றும் இல்லை. மேலும் இல்லையென்னும் உணர்விற்குமட்டும் விடயமாகி நிற்கும் மலத்திற்குச் செயல் எங்ஙனம் வரும் ? இன்மைப் பொருளுக்குச் செயல்கூற முடியாது. இங்கு " இத்தை விளைவித்தன் மலம்," என அதற்குச் செயல் பேசப்பட்டிருக்கிறது. மலமின்மை இன்பப் பேற்றிற்கு ஏதுவாக நிற்றலால் அங்ஙனம் கூறினுரென்ருல், அஃது உபசாரமாகச் சொன்னதாகுமே அன்றி உண்மை நிலையைச் சொன்னதாகாது. ஈண்டு உபசாரப் பொருள் சொல்வதில் என்ன சிறப்பு இருக்கிறது ? எனவே ஆசிரியர் கருத்துக்கு முரணுகப் பிள்ளை அவர்கள் கூறும் உரையை நாம் வருத்தத்தோடு நிராகரிக்க வேண்டிய திருக்கிறது.

வேறு சிலர், " மலமின்மை " எனப் பொருள்கூருமல், இன்பத்தினை விளைவித்தல் மலம் என்றே பொருள்கூறி, அது பொருந்தும் என்பதற்கு அடியில் காரணம் கூறு

கிறார்கள் :—"துன்ப அநுபவம் இருந்தாலன்றி இன்பப் பேற்றினைப் பூரணமாய் அநுபவிக்க முடியாது; வெயிலில் சென்று வந்தவனுக்குத்தான் நிழலின் சுகம் தெரியும். அநாதியாக ஆன்மா மல வெப்பத்தால் துன்புற்றுப் பின் இறைவன் திருவடி நீழலை அடைவதாலேயே பேரின்பத்தினை மிகுதியாய் அநுபவிக்கிறது. இதனால் ஆணவமலம் இன்பத்தினை விளைவிக்குமென்றால் பொருந்தும் என்க." இவ்வாறு சமாதானம் கூறுகின்றவர்களும் மலத்திற்கு உபசாரச் செயல்தான் கூறுகிறார்கள். உண்மையில் மலம் துன்பத்தினை விளைவிக்குமே அன்றி இன்பத்தினை விளைவிக்காது. திரு. பொ. முத்தைய பிள்ளை அவர்கள் எடுத்துக் காட்டியிருப்பதுபோல இருள் ஒளியைச்செய்தல் எக்காலத்தும் இல்லை. மலத்தால் ஏற்பட்ட துன்ப அநுபவம், இன்பத்தினை அநுபவிக்கத் துணை செய்தலால், மலம் இன்பத்தினை விளைவிக்கும் என்பது உபசாரமே அன்றி வேறன்று. புலவரொருவர், பரத்தையர் வீதி பற்றிப் பாடுகையில் "தம்மை அடைந்தோர் அத்தனை பேரையும் வறியவர்களாக்கி, அவ்வறுமையால் ஏற்படும் துன்ப அநுபவத்தால், அவர்கள் உலக வாழ்வினையே வெறுத்துத் துறவு பூண்டு ஞானவான்களாகும்படி செய்வதால், இவ்வீதியில் வாழ்கின்ற பரத்தையர் ஞானத்தை விளைவிப்பவர்கள் என்பதிற் சந்தேகமில்லை" என்று கூறுகிறார். மலம் இன்பத்தினை விளைவிப்பதாகச் சொல்வதையும் இதுபோன்ற ஒரு நயமாக வேண்டுமானால் கொள்ளலாமே அன்றிச் சிறப்பான ஒரு கருத்தாகக் கொள்ளமுடியாது.

இன்னும் சிலர், "மலத்திற்கு உபசாரமாகச் செயல் சொல்லவேண்டியதில்லை. உண்மையிலேயே அஃது இன்பத்தினை விளைவிப்பதற்குக் காரணமாக அமைகிறது. கூத்தாடுவான் அவையிடை நடிக்குங்கால், உள்ளிருந்து ஆட்டுபவனைத் திரை மறைத்து நிற்கிறது. அதனால் அவன் ஆசிரியனை மறந்து அவையோர்கொள்ளும் அகமகிழ்ச்சியால் தன்னையும் தன் ஆடலையும் வியந்து பொய்யின்பம் கொள்கிறான். ஆடுவான் திரையினுட் புகுந்தால் ஆட்டுவானைக் கண்டு இன்புறுகிறான். அப்பொழுது திரை அவையை மறைத்து நிற்கிறது. திரை அவையினைமட்டும் மறைப்பது போல் காணப்படினும் அவை தோன்றாமையே அவன்

ஆடாமைக்கும் காரணம்; ஆட்டுவானைக் கண்டு இன்புறு தற்கும் காரணம். அதனாலேயே நிரை அவ்வின்பினை விளைவித்தது என்று கொள்ளுதல்வேண்டும். மலம் இன்பத்தினை விளைவிப்பதற்கும் இவ்வாறே கொள்க." என்று சொல்கி றார்கள். இவர்கள் சொல்வதுபோல் முத்திப்பேற்றில் ஆன்மா, காண முடியாதவாறு உலகினையும் ஏனைய உயிர் களையும் மலம் மறைத்து நிற்குமானால் அம்மறைப்பை அதற் குரிய உண்மையான செயலாகக் கூறலாம். அம்மறைப் பால் ஆன்மா வேறொன்றனையும் அறியாது, இறைவனையே அறிந்து இன்புறுமாதலால் இன்பம் விளைதற்கு அதனை ஒரு பெருங்காரணமாகவும் சொல்லலாம். ஆனால் ஆணவமல இயல்பு **எல்லாவற்றையும் மறைத்தலே அன்றி, ஒன்றைக் காட்டி ஒன்றை மறைத்தல் அன்று.** ஆன்மா சார்ந்ததன் வண்ணமா கும் இயல்புடையது. மலத்தைச் சார்ந்தபோது மலமய மாகி நிற்கிறது; இறைவனைச் சார்ந்தபோது அவன் மய மாகி நிற்கிறது. எனவே முத்தியில் பரமே பார்த்திருக்கும் தன்மை ஆன்ம இயல்பினாலும், இறைவனிடத்துள்ள இன் பப் பெருக்கினாலும் நேர்ந்ததன்றி, மல இயல்பால் நேர்ந்த தன்று. மேலும் நிரை அவையினரை மறைத்தமைபோல முத்திப்பேற்றில் மலம் ஏனைய உயிர்களை மறைக்கும் என் பதும் பொருந்தாதவொன்றாகும். சிவஞானபோதச் சிற் றுரையில், சிவஞான முனிவர், "உயிர்களும் சிவத்தோ டியைந்து நின்று தம்மையும் பிறவுயிர்களையும் இவ்வா றுணர்தல் அமைவுடையதென்பது, "நாடி. அரன்-தன் னாலே தன்னையும் கண்டு தமைக்காணார் என்னுமென வறி வார்," என்றும், "தன்னாலே தனை அறிந்தால்—தன்னையும் தானே காணும் தானது வாகின்றே" என்றும், "அதிலறி வடங்கி—மன்னிட வியாபியான வான்பயன் தோன்றும்," என்றும் "ஞானநாட்டம் பெற்றபின் யானும்......என் னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்" என்றும் பிறண் டும் இவ்வாறோதும் அநுபவமுடைய தேசிகர் திருவாக்குக் களாலும் இவ்வுண்மை யுணர்ந்துகொள்க." எனக் கூறு வதிலிருந்து முத்தான்மா, தன்னை இறைவன் வண்ணமாய்க் காண்பது போன்று ஏனைய உயிர்களையும் காண்பதுண்டு என்பது தெரிகிறது. ஆகவே நிரை உதாரணம் குற்ற முடையதென்பது தேற்றம். இதுகாறும் கூறியவாற்றால்

இவ்வுரையும் பொருந்தாததாய் முடிதலால், இச்செய்யுளுக்கு என்னதான் உரை கூறலாமென்பதைச் சிந்திப்போம்.

முத்திப்பேற்றில் ஆணவமலம் நீங்கிப்போகிறதென்று சொல்கிறவர்களும் உண்டு; ஒடுங்கிப்போகிறதென்று சொல்கிறவர்களும் உண்டு. நீக்கம் சொல்கிறவர்கள் அது முத்தான்மாவை விட்டு நீங்கினும் ஏனைப்பெத்தான்மாக்களிடத்தில் இருத்தலால் அதன் நித்தியத்தன்மைக்கு இழுக்கில்லை என்கிறார்கள். ஒடுக்கம் சொல்கிறவர்கள், வியாபகப் பொருளுக்கு நீக்கம் இல்லையாதலால், ஆணவமலம் தன் ஆற்றல் கெட்டு ஒடுங்கி நிற்கும் என்பதுதான் பொருத்தமுடையது என்கிறார்கள். இவ்வெண்பாச் செய்தருளிய ஆசிரியர் முத்தியில் மூன்று முதலும் உண்டு என்று சொல்வதால் நீக்கம் சொல்கிறவர்களை ஆதரிப்பவராய்த் தோன்றவில்லை. "இத்தை விளைவித்தல் மலம்" என்பதால் வீடு பேற்றிலும் அதற்கு ஒரு செயல் உண்டு என்று அவர் கருதுபவராயும் தெரிகிறது. ஆற்றல் கெட்டு ஒடுங்கிய ஒரு பொருளுக்குச் செயல் இருக்க நியாயம் இல்லை. இதனால் ஒடுக்கம் சொல்கிறவர்களையும் இவர் ஆதரிக்கவில்லை என்பது தெளிவாகிறது. இருதரப்பாரையும் மறுக்கும் இவர் பின் எதைத்தான் நிலைநாட்டுகிறார்? அநாதி கேவலத்தில் ஆன்மாக்களை விடுத்துத் தனியே இறைவன் நிற்கவில்லை. அப்பொழுதும் அவைகளோடு அத்துவிதமாய்க்கலந்தே நிற்கிறான். இறைவன் உடனாகக் கலந்திருந்தும் மலம் ஆன்மாக்களைப் பிணித்து நிற்கிறது. இறைவன் இருப்பதற்காக அது விலகவும் இல்லை; ஆற்றல்கெட்டு ஒடுங்கவும் இல்லை. ஆனால் ஆன்மாக்களை அது பந்தப்படுத்த முடிந்ததே அன்றி உடனிருக்கும் இறைவனைப் பந்தப்படுத்த முடியவில்லை. சுத்த நிலையாகிய முத்தியில் ஆன்மாக்கள் இறைவனோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கின்றன; அநாதி கேவலத்தில் இறைவன் ஆன்மாக்களோடு கலந்திருந்தும் எங்ஙனம் மலம் நின்றதோ, அதுபோலவே ஈண்டு ஆன்மாக்கள் இறைவனோடு கலந்திருந்தும் மலம் நிற்கிறது. ஆனல் ஆங்கு அஃது இறைவனைப் பந்தப்படுத்த முடியாது நின்றமைபோல, இங்கே முத்தான்மாக்களைப் பந்தப்படுத்த முடியாது நிற்கிறது. பந்தப்படுத்த முடியாமைக்காக மலம் தன்னளவில் ஆற்றல்

இழந்துவிட்டதென்றோ, இல்லாமற் போய்விட்டதென்றோ கூறமுடியாது. இராமன் என்பான் ஆறடி உயரம் இருந்தால் அவனைத்தனிமையில் நோக்கும்பொழுது, "நெடியன்" என்றே கூறுகிறோம். ஆறே கால் அடி உயரம் உள்ள சாத்தன் என்பவனோடு நோக்குகையில், அவனைக் குறியன் என்று சொல்கிறோம். உண்மையில் இராமன் தன்னளவில் ஓரங்குலம் கூடக் குறுகவில்லை. எப்பொழுதும்போல் நெடியனாகவே இருக்கின்ற அவன் சாத்தனை நோக்கக் குறியனாகிறான். இதுபோல மலம் தன்னிடத்தில் உள்ள ஆற்றல் குறையாது எப்பொழுதும்போல் இருப்பினும், முத்தான்மாக்களிடத்தில் அதன் ஆற்றல் பலிக்காமையால், அவ்வான்மாக்களை நோக்க அது "வலிகெட்டதென்றோ," "ஒடுங்கிப்போயிற்று என்றோ," "விட்டு நீங்கியதென்றோ" கூறுகிறோம். "ஒடுக்கம்," "நீக்கம்" என்னும் சொற்களுக்கு இங்ஙனம் பொருள் கொள்ளாமல் உண்மையிலேயே முத்தியில் மலம் ஒடுங்கிப்போகிறது என்றோ, இல்லாமற் போய்விடுகிறதென்றோ பொருள் கொண்டு மயங்கக் கூடாதென்பதற்காகவே ஆசிரியர் மனவாசகம் கடந்தார் இச்செய்யுளில் தெளிவாக முத்தியிலும் மலம் உண்டு என்று கூறுகிறார் எனக்கொள்ள வேண்டியதிருக்கிறது. முத்தியில்மலம் உண்டு என்று ஒப்புக்கொண்டாலும் அது முத்தர்களைப் பாதிக்காது என்பது தேற்றம். அங்ஙனமானால், "இத்தை விளைவித்தல் மலம்" என ஆங்கு ஆசிரியர் அதற்குக் கூறுகின்ற செயல் யாதாக இருக்க முடியும்? இனி அதனை ஆராய்வோம்.

மலம் - இறைவனைப் பந்திக்க முடியாது நிற்றல்போல, முத்தியில் ஆன்மாக்களையும் பந்திக்க முடியாமல் நிற்பதால், முத்தர்களும் இறைவனுக்குச் சமமாதல் செல்லும் எனக் கொள்ள இடம் உண்டாகிறது. "ஆன்மா முத்தியில் சிவ சமம்" என்னும் சுருதி வாக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு, "முத்தர்கள் சிவசமமாகி ஐந்தொழிலும் செய்வர்" எனச் சிவசமவாதிகள் கூறுகின்றனர். இவர்கள் கூற்றைச் சித்தாந்த சைவர்களாகிய நாம் வன்மையாக மறுக்கிறோம். மலபந்தத்தினின்றும் விடுபட்டாலும் இறைவன் துணையின்றித் தனித்தியங்கும் ஆற்றல் ஆன்மாவிற்கு இல்லாமையால், பெத்தம், முத்தி இரண்டினும் அஃது அடிமையே ஆகுமன்

றிச் சமமாகாதென்றும், முத்தியில் சிவாநுபவம் ஒன்றி னுக்கு மட்டுமே அஃது உரியதென்றும், இறைவன் ஒருவனே ஐந்தொழிற்கும் உரியவனென்றும் நாம் கொள்ளுகிறோம். ஆனல் சிவசமவாதிகள் நம் கொள்கையை எளிதில் உடைப்பதற்கு வழி இருக்கிறது. இறைவன் துணை யின்றித் தனித்தியங்கும் ஆற்றல் ஆன்மாக்களுக்கு இல்லை என்பது உண்மை. ஆனல் முதல்வனை எதிர்த்து நின்று ஆன்மாக்கள் ஐந்தொழில் ஆற்றும் என்றால்தான் இதனை ஒரு காரணமாக எடுத்துக்காட்டி நம் கொள்கையை நிறுவ லாம். கருணையினல் இறைவன் ஆன்மாக்களைத் தன் போலாக்கித் தானே உறுதுணையாக நின்று ஐந்தொழில் புரியும் உரிமையை அவைகட்கு வழங்குவான் என்று கூறினல் இக்காரணம் வலியிழந்து போகிறது. ஆண்டவன் ஆன்மாக்களின் அடிமைத் திறத்தை எதிர்பார்த்துத் துணை செய்பவனல்லன்; அவை என்றும் அடிமையாகவே இருக்க வேண்டுமென விரும்புபவனுமல்லன். தன்னை அடுத்த மாணக்கனை என்றும் மாணக்கனுகவே ஆசிரியன் வைத் திருப்பதில்லை ; அவனைத் தன்னைப்போல ஆசிரியனுக்கிப் பிறர்க்குக் கல்வி பயிற்றத் துணைசெய்வதை நாம் காண்கின் ரேம். மாணக்கன் தன்னைப்போலக் கல்வி பயிற்றுவிக் கும் திறனைக் கண்டு மகிழ்வதே நல்லாசிரியனுக்குரிய இலக் கணமாகவும் நாம் கொள்கின்ரேம். "தன்னையறிவித்துத் தாவருளச் செய்தானை" என்றும், "எண்குணத்துளோமே" என்றும் ஆன்ரோர்கள் கூறும் திருவாக்குக்களும் இறை வன் ஆன்மாக்களைத் தன்போலாக்குவன் என்பதற்கு ஆதாரமாக அமைவதால் முத்தியில் ஆன்மாக்கள் சிவசம மாக முடியும் எனச் சிவசமவாதிகள் நமக்குள்ளேயே நுழைந்து தம் கொள்கையை நிலைநாட்டப் பார்க்கின்றனர். இவர் கள் கூற்றை மறுப்பதென்ரல், ஆன்மாக்களுக்கு இறை வன் உறுதுணையாக நின்ருலும்கூட அவை அவனைப்போலச் சம மாகா என்பதற்கு வலிமைமிக்க ஒரு காரணம் காட்டல் வேண்டும். சிவசமமாகி ஆன்மாக்கள் ஐந்தொழில் ஆற்ரு எனக் கூறுகின்ற நாம், இறைவன் கீழ்நின்று அவ னருளேவல் வழி ஐந்தொழில் ஆற்றும் ஆன்மவர்க்கம் இல்லையெனச் சொல்லவில்லை. அநந்த தேவர், சீகண்டருத் திரன் முதலியோர் புவனத் தலைவர்களாய் இருந்து,

படைப்பு முதலிய தொழில்களைப் புரிகின்றனர். விஞ்ஞான கலராகிய அநந்த தேவரும் பிரளயாகலராகிய சிகண்ட ருத்திரரும் ஆன்மாக்களே. நம்மைப்போல் சகல வர்க் கத்து ஆன்மாக்களாகிய பிரம, விஷ்ணுக்களும் படைத்தல் காத்தல் ஆகிய தொழில்களைச் செய்கின்றனர். இங்ஙனம் இறைவன் துணைபால் இவர்கள் தொழில் செய்யினும், ஆணவமலபந்தம் இவர்களுக்கு இருக்கவே செய்கிறது. மிகப் பெரிய நிலையிலுள்ள அநந்ததேவர், சிகண்டருத்திரர், சதாசிவர் ஆகியோர்க்கும் தலைமை செலுத்துதலால் உண் டாகும் செருக்காகிய அதிகாரமலம் உண்டென நூல்கள் முழங்குகின்றன. சிறிய அளவில் மலத்தொடக்கு இருப் பினும் அதனால் உண்டாகும் மறைப்பால் இவர்கள் அறிவி லும் இன்பத்திலும் குறைபாடுடையவர்க ளாவராதலால் இறைவனைப்போல இவர்கள் சமமாக முடியாதென்பதைச் சொல்லவேண்டியதில்லை. தம்மிலே அறிவும், இன்பமும் குறைந்த இவர்கள் ஏனைய உயிர்கட்குப் பேரின்பப் பேற்றை வழங்க முடியாதென்பதும் நன்கு விளங்கும்.

இறைவன் ஆன்மாக்களை அடிமையாக வைத்திருக்க வில்லை. தன்னைப்போல அவைகளும் ஐந்தொழில் ஆற்றும் வண்ணம் திருவருள் செய்கிறான் என்பதை அநந்ததேவர், சிகண்டருத்திரர் முதலியோர்கள் வாயிலாய் அறிகின்றோம். ஆனால் இறைவனோடு ஒப்ப வைத்தெண்ணப்படக்கூடிய அத் துணை மேம்பட்ட நிலையினராகிய இவர்களும் இறைவனுக் குச் சமமாக முடியாமைக்குக் காரணம் ஆணவமலம் இவர் கள் அறிவைத் தடைசெய்வதுதான். மலத்தடையிலிருந்து அறவே விடுபட்டு அறிவும் இன்பமும் விளங்கப்பெற வேண்டுமானால் இவர்களும் செயலாற்றுவதை ஒழித்து, இறைவனைச் சரண்புகுந்து அவனடிக்கீழ் அடிமையாய் நிற்கவேண்டியதிருக்கிறது. ஆகவே மலமென்னும் ஒரு பொருள் உள்ள அளவும் எந்த ஆன்மாவும் சிவசமமாக முடியாதென்பது நிச்சயமாகின்றது. மலமோ நித்தியப் பொருளாய்த் தன்னளவில் எக்காலத்தும் யாண்டும் ஆற் றல் குன்றாததாய் இருப்பதால் ஆன்மாக்களும் ஒரு காலத் திலும் சிவசமமாகப் போவதில்லை.

முத்தர்கள் இறைவனைச் சரண்புகுந்து அவனடிக்கீழ் அடிமையாய் நிற்பதால்தான் மலத்தால் தாக்குறாமல் இருக்

கிறார்கள். தம்மைச் சரணடைந்த முத்தர்களை மலம் தாக்காதவாறு காக்கின்ற இறைவன், அவர்களைத் தன்னைப்போல் ஐந்தொழில் ஆற்றச்செய்து, மலத்தால் தாக்குறாத வண்ணம் காக்க முடியாதோ எனக் கேட்கலாம். அவனாலும் இது முடியாத காரியமாகவே இருக்கிறது.

ஆன்மாக்கள் சார்ந்ததன் வண்ணமாகும் இயல்புடையன. இவ்வியல்பால் மலத்தைக் காரியப்படுத்துவதாகிய ஐந்தொழிலை அவை செய்யப்புகின், மலத்தால் தொடக்குறவே வேண்டியதுவரும். இதனால்தான் முத்தர்கள் வேறொன்றையும் பற்றாது இறைவனையே பற்றி அவன் வழங்கும் பேரின்பத்தை அநுபவிப்பதொன்றே பயனாகக் கொண்டிருக்கின்றனர். "புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்" மேன்மேலும் விளையும் பெற்றியையுடைய பரபோகத்தை அவர்கள் துய்ப்பதால் அதுவே முத்திப் பெரும்பயன் என்பதிலும் சந்தேகமில்லை.

இறைவனாலும் ஐந்தொழில்செய்யும் ஆன்மாக்களை மலத்தால் தாக்குறாமற் காக்க முடியாதென்பது எல்லாம் வல்ல அவன்றன் இறைமைக் குணத்திற்குப் பேரிழுக்காய் முடிகின்றதே என்று அன்பர்கள் திடுக்கிடக்கூடும். "இறைவன் ஆணவமலத்தை அறிவினை விளக்கும் ஒளியுடைப் பொருளாய் மாற்ற முடியாது," என்று கூறினால் அஃது எங்ஙனம் இறைவன்றன் எல்லாம் வல்லமைக்கு இழுக்காகாதோ அதுபோல இஃதும் இழுக்காகாது. பொருள்களின் இயல்பை மாற்றுவது வல்லபத்துக்கு இலக்கணமன்று; அவற்றின் இயற்கையை அறிந்து அவற்றால்தான் தாக்குறாமல் நின்று, அவற்றைக் காரியப் படுத்துதலே வல்லமைக்கு இலக்கணமாம். பற்றிய பொருளில் அழுந்துகின்ற ஆன்ம இயல்பு மாற்றப்பட முடியாத ஒன்றாதலால் ஐந்தொழில்செய்யும் ஆன்மா மலத்தால் தொடக்குறுதலைத் தவிர்க்க முடியாதென்க.

சிவசமம் என்பது இறைவனைப்போல ஐந்தொழில் ஆற்றுவதுதான் எனச் சிவசமவாதிகள் சொல்கின்றனர். ஆனால் ஆன்மாக்கள் ஐந்தொழில் ஆற்றின் ஆணவமலம் அவற்றின் அறிவினைக் குறைத்துவிடுவதால் அவை சிவசமமாக முடியாமற் போகின்றன என்பதை மேலே காட்டினோம். எனவே சிவசமவாதம் செல்லாதென்பதற்குச் சரி

யான மறுப்பாய் அமைவது ஆணவமல இருப்பே ஆகும். முத்திபெற்ற ஆன்மாக்கள் பிறப்பு இறப்பினுக்குட்படாம லிருப்பதால் அவை சிவசமம் என வேதாகமங்கள் கூறு கின்றன என்பதே சித்தாந்த சைவக் கருத்தாகும். மலம் நித்தியப்பொருளாய் இருப்பதால், அதன் தாக்குதலுக்கு அஞ்சி, முத்தர்களும் ஒரு செயலும் ஆற்றுமல் இறைவ னுக்கு அடங்கி அடிமையாகவே இருக்கவேண்டிய திருக் கிறது. முடிந்த நிலையாகிய முத்தியிலும் சமநிலை எய்த வொட்டாமல் ஆண்டானுகிய இறைவன் இன்பத்தை வழங்க, ஆன்மா அடிமையாகவே இருந்து அதனைத் துய்த்து அமையவேண்டியதான ஒரு நிலையை மலம் விளை விக்கிறது. ஆசிரியர் மனவாசகங் கடந்தார், "இத்தை விளைவித்தல்" என்று கூறியதற்கு எல்லாரும் "இந்த இன் பத்தினை விளைவித்தல்" என்றே பொருள்கொண்டிருக்கின் றனர். இன்பம் இறைவனிடத்துள்ள தென்பது யாவரும் நன்கறிந்த ஒன்றுதலால், "இன்புங்கொடுத்தல் இறை" என் பதிலிருந்தே இறைவனுல் அவ்வின்பம் விளைகிறது என்பது தெளிவு. ஆகவே "இத்தை விளைவித்தல்" என்பதற்கு மீண்டும் "இந்த இன்பத்தை விளைவித்தல்" எனப் பொருள் கொள்ளவேண்டிய அவசியமில்லை. "சுத்த அநுபோகத் தைத் துய்த்தல் அணு", "இன்பங்கொடுத்த லிறை" எனக் கூறியபின்னர், "இத்தை விளைவித்தல் மலம்" என் பதால், "இந்த நிலையினை விளைவித்தல் மலம்" எனப் பொருள் கொள்ளுதல் பொருத்த முடையதாகத் தோன்றுகிறது. முத்தியில் ஆன்மா இன்பத்தைத் துய்க்கிறது; இறைவன் அவ்வின்பத்தை வழங்குகிறுன்; பெறுவானும் கொடுப் பானுமாக இருக்கின்ற நிலை சமம் அற்ற நிலையாகும். இந்த நிலையை மலம் விளைவிக்கிறது

எனவே, இங்கு ஆராய்வான் எடுத்துக்கொண்ட உண்மை விளக்கச் செய்யுளுக்குப் பின்வருமாறு உரை விரித்துக் கொள்ளுவது ஏற்றதாக இருக்குமெனக் கருது கின்றேம் :—" வீடு பேற்றிலும் உயிர், இறை, ஆணவமலம் ஆகிய மூன்று பொருள்களும் உண்டு. சுத்த அநுபோக மாகிய பேரின்பத்தைத் துய்ப்பது ஆன்மா ; அதனை வழங்கு வது இறைவன்; இங்ஙனம் முத்தியிலும் சமமாக முடியாமல் இறைவன் கொடுக்க, ஆன்மா துய்த்து அமையும் நிலையை

விளைவிப்பது மலம்.'' இங்கே யாம் கூறிய கருத்துக்கள் தவறுடையனவாகக் காணப்படின் அறிஞர்கள் கருணை கூர்ந்து அவற்றை எடுத்துக் காட்டி விளக்கம் தருமாறு மீண்டும் வேண்டிக்கொண்டு இதனை முடிக்கின்றோம்.

---

# அப்பர் அருள் மொழி

(திருமதி. வித்வான் - சிவ. மீனாட்சிசுந்தரசிவை அவர்கள்)

(மலர் - 32; இதழ் - 6 ; 223-ம் பக்கத் தொடர்ச்சி)

அத்தகைய கடலில் நஞ்சமுதுண்டவர் நமது உயிர்க்குயிராக உலகோடும், உடலோடும் ஒட்டியிருப்பதுபோல் இருக்கின்றார். அவர் இந்த உடம்பினின்றும் இந்த உயிர் நீங்கவேண்டும் காலமிது என்று கைவிட்டுவிடுவாரானல் இவ்வுடம்பு ஊரால் வெறுக்கத்தகுந்த அருவருப்புடைய ஒரு தூயதல்லாத பொருளாகும்.

“ பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி அலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே ”

நறுமணமிக்க பூவினைக்கொண்டு, திருவைந்தெழுத்தை நினைந்து, போற்றித் தொடரைப் புகன்று, அரன் பொன்னடிகளில் இட்டு வணங்கி, எச்செயலையும் தொடங்குவது தன்னைச் சிவனுக்கு அடிமையென்றும், தான்செய்யும் செயலனைத்தும் அவனை மறவா நினைவால் செய்வதால், அவன் செயலென்றும் உண்மையால் கொள்ளப்படும். அங்ஙனம் செய்யாதவர்களும், மனத்திற்கும், செயலுக்கும் நடுவாக நின்று அகத்தும் புறத்தும் உரிமையுடையதாய்க் காணப்படும் சொல்லினைச் சொல்லும் கருவியாகிய நாவினைக் கொண்டு, அரனுடைய திருப்பெயராகிய செந்தமிழ் ஐந்தெழுத்தினை அன்பொடு பலகாலும் சொல்லுகின்றிலர்.

இத்தகையவர் உடம்பினுள் உயிர் ஒன்றிருக்கிறது; அவ்வுயிர்க்கு உடம்பு கடல் கடப்பதற்குத் தோணி போன்று, கடவுளை அடைவதற்குக் கருவியே யாவதன்றிப் பிறிதில்லை. ஆகவே, காதல் உண்டாகவே காதல் செய்து உய்யவேண்

டும் என்னும் கருத்தின்றி அவ்வுடம்பினை மிகப் பேணுகின்றனர். உடம்பினை மிகப் பேணுவதால் நெடுநாள் இன்பத்தோடு வாழலாம் எனத் தப்பாக எண்ணி அவ்வாக்கைக்கே இரைதேடித் துன்புற்று வருகின்றனர்.

இரை என்னும் சொல்லாலேயே இவ்வுடம்பின் இழிவு புலப்பட வைத்தாராகும். ஐயறிவுடைய சிற்றுயிர்களின் உணவினையே இரை என்பது மரபு. ஆறறிவு வாய்ந்த மக்களின் உணவினை உணவு முதலிய உயர்ந்த சொல்லால் சொல்வதே மரபு. இவ்வுண்மை

" இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய் "

என்னும் திருக்குறளால் அறியலாம்.

அத்தகைய துன்பத்தோடு பேணிய உடலும் உயிர் நீங்கிய காலத்துக் காக்கைக்கே இரையாகிக் கழியும். அந்தோ! அங்ஙனம் கழிகின்றனவே எனக் கழிபேரிரக்கம் கொள்கின்றார் நமது அப்பரடிகள். காக்கைக்கே இரையாகி கழியுமென்பதற்கு, உயிரோடு கூடிய காலத்துப் படைத்த உணவினை உடம்பு எற்றுக் கொள்ளுதலும், உயிர் நீங்கிய காலத்து முன் இயைபுபற்றி அவ்வுடம்பின் முன் படைக்கும் படைப்பினைக் காக்கைக்கே வைக்கும் உலகியலினாலும் உணரலாம்.

" குறிகளும், அடையாளமும் கோயிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே ?"

எங்குஞ்செறிந்த, எவ்வகைப் பெயரும், உருவுமின்றி என்றும் மாறாது ஒன்றுபோல் நிற்கும் சிவபெருமான் ஆருயிர்கள் உய்தற்பொருட்டுத் திருப்பெயரும், பண்பினை விளக்கும் திரு அடையாளமும், அவ்வடையாளத் திருஉரு நிற்றற்குரிய திருக்கோயிலும், அத்திருக்கோயிலின் வழிபாட்டினைச் செய்வதற்குரிய நெறி முறைகளும், அந்நெறிகளைப்பற்றித் தொண்டு பூண்டொழுகுவார்க்கு அவ்வத் தொண்டுக்கேற்ற பயன் அருளிச் செய்யும் அவனது நடுநிலைகொண்ட நேர்மையும், நாம் அறிந்துகொள்ளும்

பொருட்டு, அவன் திருவருள் தூண்ட மெய்யுணர்ந்தாரால், எல்லை முடிவில்லாத வேதங்கள் பாடப்பெற்றுள்ளன. அவ் வேதங்கள் நாம் அறிந்து உய்வதற்கு முழங்கிக்கொண்டிருந் தாலும், முன்னே நல்வினைப் பேறில்லாத சிலர்க்கு அவ் வேத முழக்கத்தின்கண் மனம் புகாமை வியப்பாக இருக் கின்றது. அதுபோல் நீங்களும் உங்கள் மனத்தையும் புக விடாமல் இருக்கின்றீர்களே; நீங்கள் எங்ஙனம் உய்யப் போகின்றீர்கள் என வருந்திக் கூறுகின்றார் நாவுக்கரையர்.

"பாயிருள் நீங்கி" என்னும் உண்மைநெறி விளக்க இரண்டாவது பாட்டின் கருத்து இம்மூன்று பாட்டுக்களி லும் மிளிர்கின்றது.

உலகத்துப் பொருள்களையெல்லாம் உள்ளத்தால் உரு வாக்கி, அவை உலவுவதற்குத் தான் நிலைக்களனாக இருந்து, அவ்வாற்றல்தான் எல்லாம் என்று சொல்லும்படியா யுள்ள அழகிய பரையாகிய திருவருளாற்றலைத் தனக்குத் திருமேனியாகக் கொண்டு திகழ்பவன் சிவபெருமான் ஆவன். அவன் இத்தகைய திருமேனி கொள்ளுவது ஆருயிர்கள் மலப்பிணிப்பினின்றும் நீங்கித் தன் திருவடிப் பேறாகிய மலப்பிணிப்பினில் சார்ந்து இன்புறவேண்டும் என்னும் நன்னோக்கத்தால் ஆகும். அதனைச் சார்ந்ததின் வண்ணமாக இருக்கும் நாம் அறிவது இடையறாது அவன் நமக்குச் செய்து போதரும் பேருதவிகளை எண்ணி, எண்ணி ஈடிலா இன்புற்று, அவன் திருவடிக்கு மீளா ஆளாய் அவ னைக் காணும் வாயிலாக நம்மையும் நாம் காண்பதேயாகும். ஒரு பொருளைக் காண்பதனாலேயே நம்மை நாம் காண வேண்டும் என்பது நம்முடைய நடைமுறைப் பழக்கத்தால் அறியலாம். இது சிவவடிவமாகும்.

அந்த வகையில் அவனைச் சார்ந்து, அவனைக் காண்பதே பிறவிப்பயன். அதன்பொருட்டே உள்ளம், உரை, உடல் ஆகிய முப்பொறிகள் அவனால் நமக்கும், நல்ல உயர்ந் தார்க்கும் நம்மால் காணவொண்ணாது, கேட்கப்படுகின்ற வெவ்வேறு உலகத்து உயிரினங்களுக்கும் தேவர்களுக்கும், கைம்மாறு கருதாது பெருந்தண்ணளியால் தந்தளிக்கப்பட் டுள்ளன. அதனால் அவன் ஒருவனே முழுமுதற்றலைவன் என வழுத்தப்படுதற்குரியன். அவ்வுண்மை,

" வாழ்த்த வாயும் நினைக்கமட நெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்தவா வினையேன் நெடுங் காலமே "

என்னும் இத்திருப்பாட்டில் காணலாம்.

வாழ்த்த வாயும், நினைக்க அடக்கமும் இளமையும் வாய்ந்த நெஞ்சமும், வணங்குதற்கு ஐம்புலன்களும் ஓரிடத்து ஒருங்கமைந்த தலையினையும் தந்தருளியுள்ளான். அத்தகைய தலைவனை வண்டுகள் மொய்த்து தேன் உண்பதற்கு இடனுயுள்ள நறிய மலர்களைக் கையாற்கொய்து கொண்டு வந்து, காதலுடன் உள்ளம் திருவைந்தெழுத்தை எண்ண, உரை போற்றித்தொடர் புகல, உடலால் தூவித் தொழ வேண்டுவது தலையாய கடனுகும்.

தீவினையேன் அங்ஙனம் செய்யாது மலச்சார்பினல் வினையும், வினைச்சார்பினல் மாயாகாரியப் பொருள்களும் சூழ்தர அவற்றுள் மயங்கி அவையே நிலையெனக்கொண்டு, நிலையானவனும் அவற்றை இரவலாகத் தந்த தலைவனும், நம்மிடத்தினின்றும் நமக்கு விருப்பமில்லாவிடினும் வேண்டிய காலத்திற்குமேல் நம்மோடு வைத்திராது எடுத்துக் கொள்பவனுமாகிய சிவபெருமானை எண்ணுது நீண்ட காலத்தைக் கழித்துவிட்டேன். இனியேனும் உண்மையன்பால் அவனை எண்ணி ஈடேறுவேனுக. இத்தகைய நன்னினைப்பு ஒருவருக்கு வருமானல் அதுவே மாறுதலில்லாத சிவவடிவமாகும்.

திருவருளாலே ஆருயிர்களை நடத்தி வந்து அவற்றிற்குத் தகுதியை உண்டாக்கி உண்டாக்கின இடத்தில் மருந்தால் நோயும், கல்வியால் அறியாமையும் கழிவன போன்று யான் எனது என்னும் செருக்கு இரண்டும் சிறிதும் பொருந்தாது உயிர் மாட்டுப் பசையற்று நின்ற இடமே சிவபெருமானின் திருவடியாகும்.

அத்தகைய திருவடிப்பேறு பெற்றுர்க்குப் பார்க்கிற இடங்கள் அனைத்தும், பளிங்கின் உட்பொருள் புறத்துத் தெளிவாகப் புலனுவது போல உலகத்தினிடத்தும், உலகத்துப் பொருள்களினிடத்தும், உயிர்களினிடத்தும், உள்ளீட்டமாய் நின்றியக்கும் ஒரு பெரும் பொருளாம்

சிவபெருமானின் தோற்றமே தோன்றுவதாகும். அங்ஙனம் தோன்றுவதனையே சிவபெருமானுக்குரிய நிலைபேறுடைய உண்மைத் திருமுகமென்று வண்மைத் தமிழ் ஆகமங்கள் வனப்புற வழங்கும்.

இவ்வுண்மை, ஆளுடைய அரசு அடிச்சுவடு யாதும் படாது ஆண்டவன் அருளாணைப்படி கையிலைற் காட்டிய குளத்தில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்த காலத்து அங்குக் காணப்பெற்ற உடம்பு உயிர்களோடு உலாவும் எல்லா இடங்களிலும் சிவனது தோற்றமே கண்டு அவற்றையும் சிவமாகவே கொண்டு பாடியருளிய "மாதர்பிறைக் கண்ணியானை" என்னும் திருப்பதிகத்தால் காணலாம்.

சொல்லொணாததாய், நினைத்தற்கும் அரியதாய், காண்டற்கும் தீண்டற்கும் எட்டாததாய், நுகர்விற்கும் உண்மையதாய், குன்றுதலில்லாததாய், என்றும் உள்ளதாய், குறைவில் நிறைவாய் உள்ள பேரின்பமே சிவபெருமானுக்குத் திருமுடியாகும்.

அடியும், முகமும், முடியும் இத்தன்மையன என்னும் உண்மையினை, நூலானும், நுண்ணுணர்வாலும் நேர்மைச் சிவனடியார் சூழ்வானும், நன்ருகத் தெரிந்து பொருள் ஒன்றே என்னும் துணிவோடு, மாயாகாரியப் பொருள் வேறென்றும் நிலையில்லாததென்றெண்ணி, அவற்றின் கண் உள்ளம் செல்லாது, நீங்கிய நிலையிலேயே நின்றுவிடாது, தனக்கு வழித்துணையாய் உலகியல் நடத்தியும், ஆட்டியும், திருவடியியலில் நடத்திக் கூட்டியும் செய்யும் தன்மை வாய்ந்த திருவருள் ஆற்றலாகிய தற்பரையில் அழுந்தி, அதன் வாயிலாகப் பெறத்தக்க சில சித்துக்கள் முதலாகிய வியப்புடைச் செயலில் அழுந்திவிடாது, இன்னவாறு உள்ளதென்று சொல்லவொண்ணாததாய், உண்மையில் உள்ளதாய் காணப்படும் வியப்புடைத்தாக உள்ள தெரிதற்கரிய பேரின்பப் பெருவாழ்வில் அருளால் புகுதல் சிவனுடைய உண்மைக் காட்சியாகும்.

இத்தகைய மெய்க்காட்சிக்குத் தகுதியாகிய உயிர் கண்டதே கண்டு, கொண்டதே கொண்டு, உண்டதே உண்டு செல்வதிலேயே மேலும் விருப்பங் கொள்ளாது வழி நடப்பார் வழி நடைக்குத் துணையாகும் வகையில் ஆங்காங்கு உள்ள பொருள்களோடு பற்றுச் செய்தலும்,

அப்பொருள்களால் ஆகும் பயன்களைக் கொள்ளுதலும், வேண்டாத இடத்துப் பற்றுச் சிறிதுமின்றி உடன் தள்ளுதலும் ஆகிய செய்கைகளைச் செய்வது போன்று செய்து உய்வகை நாடுதல் வேண்டும். அங்ஙனம் நாடாமையால் வருங் குற்றத்தை வரும் திருப்பாட்டு உணர்த்துகின்றது.

" எழுது பாவைநல் லார்திறம் விட்டுநான்
தொழுது போற்றிநின் றேனையுஞ் சூழ்ந்துகொண்
டுழுத சால்வழி யேஉழு வான்பொருட்
டிழுதை நெஞ்சமி தென்படு கின்றதே."

மண், பொன், பெண் என மூத்திறத்தால் மயக்கம் மிகுதியும் கொள்ளும் உலகத்தில் பெண் மயக்கம் இன்றேல் பொன் மயக்கமும், மண் மயக்கமும் தாமே கழிந்து ஒழியும். அதுபற்றி அம்மயக்கம் ஒன்றினையே மிகுத்துக் கூறும் நூல்கள்.

அழகுற எழுதப்பெற்ற உயிர் ஓவியம் போன்ற நல்லாலாராகிய பெண்களின் சார்பாந் திறத்தினைப் பெருமான் அருளால் விட்டு நீங்கி அப்பெருமான் திருவடியினையே இடையறாது, தொழுது, போற்றிப் புகழ்ந்து நின்றேன். அங்ஙனம் நின்ற என்னையும், எனக்கு அத்தகைய நல் வழிக்குத் துணையாக வேண்டிய என் நெஞ்சமானது தன்வழிக்கு ஈர்ப்பதற்கு வாய்ப்புக்களைச் சூழ்ந்துகொண்டு உழுத சால்வழியே மீண்டும் உழுவதற்கு எண்ணுவது போன்று என்னை உலக மயக்குள் அழுத்துகின்றது. இங்ஙனம் அறிவில்லாத என்னெஞ்சம் என்னையும் துன்பப் படுத்தி, தானும் என்ன பாடுபடுகின்றது !

இறைவனுடைய காட்சி உறுதிப்படல் வேண்டும் என்றும், நெஞ்சத்தின் வழி நாம் செல்லாது இருந்தால் அந்நெஞ்சம் நம் வழியே திரும்பிவிடும் என்றும், அதுவே ஆண்டவன் அருளாணை என்றும் அறிதல் வேண்டும்.

இறைவன் திருமேனி திருவருளாகும் ; அவனது திருவடி விளக்கம் செருக்கற்ற இடத்தது ; எங்கும் அவன் நிறைந்து நிற்கின்றான் என்ற உண்மை உணர்தல் அவனது திருமுகம் ; அவ்வுணர்ச்சி மேலிட்டால் அடையும் சொல்லொணாத பேரின்பம் திருமுடி ; அவன்கண் கூடிவிடுவதே காட்சி ; என்று கண்டு இத்தகைய உணர்வினில் உறைந்து

நிற்கும் அன்புயிர்கள் ஒரோ வழி அந்நிலை நீங்கி ஊழ்வயத் தான் உலகினை நோக்குதலும் உண்டு. அங்ஙனம் நோக்குங் கால் முன்நுகர்ந்த உலகியற் பொருள்கள் ஐம்புலனுக்கும் புலனாகும். அப்படிப் புலனாவதும் அப்பொருள்களைக் கண்டு பண்டுபோல அவற்றில் மயல் கொண்டு மீண்டும் பிறப்புக்காளாகாது, அழுந்திவிடாது, அப்பொருள்களைப் பார்க்கும் உயிர்தான் அப்பொழுது இருக்க வேண்டிய நிலையினைக் காணும். கண்டதும் தன்னை இத் தணைச் சிறந்த நிலைக்குக் கொண்டுவந்த, தனக்கு மேலாகக் காணப் படுகின்ற ஒப்பில்லாத அருளை நினைவுக்குக் கொண்டுவரும். கொண்டு வரவே அதனை வடிவமாகக் கொண்டியக்கும் சிவத்தினது உண்மையினை அருளால் காணும்.

அத்தகைய காட்சியால் ஐம்புலனுக்கும் புலனாக நேர்ந்த பொருள்களெல்லாம் ஆண்டவனுடைய பொருள் என்னும் மெய்ம்மையினை மனங்கொண்டு நோக்கும். அங் ஙனம் நோக்கி, முன்பு ஒரு தப்புத்தான் செய்திருந்தால் அதற்குக் காரணமாயிருந்தது சிவமே என்றும், அதனை மறந்து தூய நினைவு ஒன்று இப்பொழுது கொண்டால் அதுவும் சிவனேயாம் என்றும் உணரும். இங்ஙனம் கொள்ளும் உணர்வினைத் தருவதும் உணர்வுக்கு உணர் வாய் வருவதும் அப்பொருளே என்றும், அப்பொருள் அசையாத இடத்து எப் பொருளுக்கும் அசைவில்லை யென்றும், அத்தகைய பெரும் பொருளாகிய சிவபெரு மானை இடையறாது நினைந்து மனம் ஒன்றுவதே சிவ யோகம் எனப்படும் என்றும் சிவ ஆகமங்கள் செப்பும்.

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே."

இத்தகைய சிவயோகத்திற்குத் தக்க நிலைக்களமாக ஆக்கிக் கொள்ளும்பொருட்டு உடல் முதலியவற்றைத் தந்து அதற் குரிய வழிவகைகளை நூலானும், இடையறாது ஒழுகிவரும் சீலமிக்க மெய்யடியார்களாலும் காட்டிக்கொண்டு வருப வன் சிவபெருமான். அப்படி வருகின்ற அவனை அன்பினால் உள்ளமுடைந்து, நெகிழ்ந்து இடையறாது நெஞ்சத்தி னுள்ளே அவன் அருளால் புகுந்து வெளிப்பட்டு நிற்பன்.

அவன் பொன்போலும் மேனியினையும் மின்னல் திருச்சடையினையும் உடையவன். அதனால் அவன் பொன்னார் சடைப் புண்ணியன் என்றழைக்கப்படுகின்றனன். அவனை அந்த வழியில் அடையாத சில்லோர் வஞ்சனை மிக்கவராய் உலகோர் மெச்சுவதற்கும், தாமும் ஏதோ சிவனை வழிபட்டோம் என்று தம் அறியாமையால் தம்மை ஏமாற்றிக் கொள்வதற்கும் காரணமாகப் பூவும் நீரும் கொண்டு வழிபடப் போகின்றனர்.

அதனைக் கண்டு சிவபெருமான், அவரைக் காணக் கண் கூசுபவராய், எள்ளல் சிரிப்புச் சிரித்துக்கொண்டு, திருவுருவத்தினிடம் இல்லாது விலகி நிற்பர். எனவே அவனை நினைந்து உருகுவதே வஞ்சனையற்று வழிபடுவதே சிவனோடு கூடுதலாகிய சிவயோகம் எனப்படும்.

சிவனொடு கூடிச் சிவனையே இடையறாது நினைந்து, அந்நினைவே தமக்கு உணர்வுக்குணர்வென உறுதியோடிருக்கும் மெய்யடியார்கள், எச்செயலையும் முனைந்து செய்யார். ஆண்டவன் அருள் முனைப்பால் அவர்களைக் கருவியாகக் கொண்டு, செய்யப்படுவார் உய்ய உலகில் ஆங்காங்கு ஏதேனும் செயல்களைச் செய்விப்பன். அங்ஙனம் செய்யும் செயல் கொடுமையாகக் காணப்பட்டால் அது நோயின் கடுமைக்குத் தக்கவாறு, சேய்க்குத் தாயும், மருத்துவனும் கொடுக்கும் கடுமையான மருந்தோடு ஒக்கும்.

அம்முறையில் அடியாருள் சிறந்த சண்டேசுர நாயனாரைப் போன்று பாதகங்களைச் செய்தாலும் ; இயற்பகை நாயனாரைப் போன்றும், கோட்புலி நாயனாரைப் போன்றும் கொலைகளைப் புரிந்தாலும், அடியார்க்கு அமுதளிக்க நெல் முட்டுற்ற காலத்து அரசன் பண்டாரத்தில் களவு எடுத்த அடியார் போன்று களவுகளைச் செய்தாலும் ; கள்ளுண்டார் வெறிபோல்வெறி மிகுதிப்பட்டுச் சூதின் பணத்திற் கஞ்சி எழுந்தாரைக் கத்தியால் குத்திய அடியார் போன்று வெறிச் செயல்கள் செய்தாலும் ; கல்லெறிந்து வழிபட்ட சாக்கியனார்போன்றும், சுவைத்து அமுது குழைத்த (நிவேதித்த) கண்ணப்பர் போன்றும், சிலந்தி விழுந்த திருமேனியில் எச்சில் உமிழ்ந்த நீலநக்கர் மனைவி போன்றும், நெறியல்லா நெறிகளில் பயின்று வந்தாலும்,

திருநாளைப்போவார் போன்று பிறந்த சாதிக்கு மேம்பட்ட கொள்கையில் ஈடுபட்டு சாதி நெறிகளைத் தப்பவிட்டாலும் ஏயர்கோன் கலிக்காமர் போன்று தவறல்லாதவற்றைத் தவறு என்று நினைத்த தவறு வந்திடினும் இவைகளிலே மெய்யடியார் உள்ளம் சிறிதும் புகாது. இச்செயல்களைத் தாம் செய்ததாக எண்ணாது, தாம் சிவமாகவே நிற்பர். சிவமாக நிற்பதென்பது சிவநிறைவில் உள்ளம் ஒடுங்குதல்.

அங்ஙனம் நின்ற இடத்து சிவபெருமான் இவனது உடலிடமாகவும், உயிரிடமாகவும் நின்று அவ்வுடல் வாயிலாகவும், அவ்வுயிரின் உணர்வு வாயிலாகவும் வரும் நுகர்வுகளைத் தானே நுகர்வன். அவ்வுயிரை இவற்றின்கண் நினைவுகூடாவண்ணம் உறங்கச் செய்வன். அவ்வுயிர்க்கு வரும் பலவகையான இயற்கை நுகர்வுகளையும் தன்நுகர் வாக்கி வைப்பன். வேறற அவ்வுயிரோடு நின்று அவ்வுயிரைத் தானாக்கி விடுவன். அந்நிலையினையே நாளும் வளரும் சிவநுகர்வெனச் (சிவபோகம்) சொல்லும் வழியாகும்.

இவ்வழியிற் செல்லும் உயிர்க்குச் சிவன் துணையாய் நின்று அவ்வுயிரைக் கொண்டு தன்னை அடையும் முயற்சியில் ஈடுபடுத்தி முயல்விப்பன். அவன் வழி நின்று முயலாத உயிர்கள் அவனை அடைய முடியாது. கற்பிப்போன் வழி நின்று கல்லாதமாணவனும், மருத்துவன் வழி நின்று திருந்தாத நோயாளியும் போன்று அவ்வுயிர்கள் மீண்டும் பிறக்க நேரும். அவ்வழிவகைகளை உருவக வாயிலாக ஆளுடைய அரசு அருளிச் செய்கின்றார்.

“ விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே.”

கடவுள் நம் முயற்சியால் வெளிப்படுவதற்கு முன் நம் முள்ளே தீக்கடைக்கோலில் மறைந்து நிற்கும் தீப்போலவும், பாலில் மறைந்து நிற்கும் நெய்போலவும், மணியில் மறைந்து நிற்கும் ஒளிபோலவும் மறைந்து நிற்கின்றனன். தீக்கடைக் கோலினின்றும் தீ .மிகவும் வருத்தத்தோடு இழுத்துக்கடைய வெளிப்படும். பாலில் மறைந்து நிற்கும்

நெய் அத்துணை வருத்தமின்றிக் காய்ச்சி, பிரைகுற்றி இழுத்துக் கடைந்தால் வெளிப்படும். மணியில் உள்ள ஒளியினைச் சாணைக்கல்லில் வைத்துக் கடைந்த அளவானே வெளிப்படுத்திவிடலாம்.

அதுபோன்று சிவபெருமான் திருவடியில் வைத்திருக்கும் இறவா இன்ப அன்பாகிய உறவு கோலினை நட்டு, அவனையே மறவா நினைவோடு எண்ணிக்கொண்டிருக்கும் உணர்வாகிய கயிற்றினால் மிகவும் முறிர இழுத்துக் கடைய அவன் முன்னிற்பன். முறுக, வாங்கிக் கடைய என்னும் இரண்டு அடைகளை விறகுக்கு முற்றாகவும், பாலினுக்கு முறுக என்பது நீக்கி, வாங்கிக் கடைய என ஒன்றாகவும், மணிக்கு கடைய எனவுங் கூட்டி வன்மை, மென்மைப் பொருள் காண்க.

விறகு போன்றது உடல்தொண்டாகவும், பால்போன்றது உரைத்தொண்டாகவும், மணிபோன்றது உளத்தொண்டாகவும் கொள்க. இவற்றிற்கு முறையே ஆளுடைய அரசின் உழவாரத் தொண்டும், ஆளுடைய பிள்ளையின் பாடற்றொண்டும், நின்றவூர் பூசல் நாயனாரின் உளத் தொண்டும் ஒப்பாகும்.

---

## அப்பர் கரையேறிய திருக்குளத் திருப்பணி

அப்பர் கரையேறியதும், வரலாற்றுச் சிறப்புடையதுமான "திருக்குளம்" இன்றும் அழியாதிருப்பது நாம் பெற்ற தவப்பயனேயாகும். "தொண்டு மனப்பான்மை" என்ற உணர்வை முதன் முதலில் இந்தியப் பெருநாட்டில் விதைத்த பெருமை அப்பரையே சாரும். நலிந்து வாடும் தமிழ்நாடு அவ் அடியாரின் வரலாற்றை யறிந்து, நிலைத்திருக்கும் "நினைவுச் சின்னம்" எழுப்பிப் புத்துணர்வு பெற வேண்டிய நிலையிலிருக்கிறது.

வண்டிப்பாளையத்தில் இன்று நிலவும் "அப்பர் கரையேறிய திருக்குளம்". திருக்குளமாயில்லை. ஒரு சிறு குட்டையாகவே காட்சியளிக்கிறது. திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீபாடலேசுவரர் ஆண்டுதோறும் சித்திரை அனுஷ நக்ஷத்திரத்தில், அத் திருக்குளத்திற்கு எழுந்தருளுவதும், "கரையேறிய திருவிழா" நடைபெறுவதும் தொன்றுதொட்டு நிகழும் நிகழ்ச்சிகள். இவ்வளவு சிறப்பிருந்தும் கண்டோர் உள்ளத்தைக் கனிவிக்கும் நினைவுச் சின்னம் இல்லையே! திருக்குளம் சீராகவில்லையே!

படித்துறையும் சுற்றுச் சுவரும் அமைந்த திருக்குளம்; அதன் அருகில் அப்பர் பெருமான் திருவுருவச் சிலையமைந்த கல் மண்டபம்; மண்டபத்தில் "நமச்சிவாயப் பதிகம்" பொறித்துப் பதிக்கப்பெற்ற சலவைக் கல் ஆகிய இந்த நினைவுச் சின்னங்கள் உருவாகவேண்டும். தமிழன்பர்களின் நன்கொடை குவிதல் வேண்டும்.

இத்திருப்பணிக்கு ஏறத்தாழ ரூ. 20,000 வேண்டியிருக்கும் என மதிப்பிடப்பட்டுள்ளது. மலாயா நாட்டுத் தமிழன்பர்கள் அளித்த நன்கொடை ரூ. 4,000-மும், அரசினர் நன்கொடை ரூ 3,000-முமே இதுகாறும் கிடைத்திருக்கின்றன. மேற்கொண்டு பொருள்வேண்டும். இவ்வேண்டுகோளைக் கண்ணுறும் பேரன்பர்கள் நிரம்பப் பொருளுதவி புரிந்து, திருப்பணியை நிறைவேற்றி வைத்து, திருவருட் பேறு பெற்று உய்யுமாறு வேண்டிக்கொள்ளுகின்றோம்.

### திருப்பணிக் குழு அங்கத்தினர்கள்

சென்னை மாநிலக் கடலூர் அறநிலையப் பாதுகாப்பாளரின்
Roc. 5042/58-A 3 D/3-3-59, 5-3-59 & 13-3-59 தேதி
உத்திரவுகளில் அங்கிகாரம் பெற்றது.

1: ஸ்ரீ பு. வே. தேவராஜ முதலியார், தலைவர்
2. ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள், ஞானியார் மடாலயம்
3. B. A. பாலசுப்பிரமணிய முதலியார், வண்டிப்பாளையம்
4. ஸ்ரீ S. ஆறுமுக முதலியார், முருகேசபேட்டை
5. ஸ்ரீ V. சுவாமிநாத முதலியார், வண்டிப்பாளையம்
6. ஸ்ரீ P. கணபதி பிள்ளை ஷை
7. டாக்டர் P. V. ராமமூர்த்தி முதலியார், மஞ்சகுப்பம்

8. ஸ்ரீ P. கோவிந்தசாமி, அப்பர் அகம், மலேயா
9. ஸ்ரீ K. L. ராமசாமி ரெட்டியார், டிாஸ்டி
10. ஸ்ரீ P. G. ரங்கநாதன், ஷெ டி
11. ஸ்ரீ T. P முத்துசாமி ஷெ டி
12. ஸ்ரீ C, போகநாதம் பிள்ளை, கடலூர்
13. ஸ்ரீ A. முத்தைய முதலியார், வண்டிப்பாளையம்
14. ஸ்ரீ நாகப்ப சாமியார், ஷெ டி
15. ஸ்ரீ S. முத்து முதலியார் ஷெ டி
16. பாடலேஸ்வரர் தேவஸ்தான நிர்வாக அதிகாரி (Executive Officer) காரியதரிசி, பொக்கிஷதார், திருப்பாதிரிப்புலியூர்

---

## கூத்தன் கூத்து

(வித்துவான் - அ. சண்முகசுந்தரம், B. A., கரந்தை)

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தையெனக்
கறியும்வண்ணம் அருளியவா ரூர்பெறுவார் அச்சோவே"

என்று திருவாசக அச்சோப் பதிகத்தில் மணிவாசகர் பாடியுள்ளார். நல்ல நெறி யல்லாத நெறிகளை நல்ல நெறிகள் என்று எண்ணிக்கொண்டிருக்கிற என்னிடம் சிறுநெறிகள் சேராமல் திருவருளே சேரும்படி, " இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் " என்னும் குறியொன்றும் இல்லாத கூத்தனாகிய தனது கூத்தை எனக்கு அறியும்படி அப்பெருமான் அருளியவாறு வேறு யார் இதனை அடைவார்கள் ? என்ன வியப்பு! என்று மணிவாசகர் சொல்லியபடி, கூத்தன் கூத்தினை அறிந்தால் சிறு நெறிகள் சேராமல் திருவருளே அடையலாம் என்பது விளங்கும்.

கூத்தன் கூத்துக்களில், மூன்றுவகைக் கூத்துகளைப் பற்றிக் கலித்தொகையில் கடவுள் வாழ்த்துப் பாடிய நல்லந்துவனார் பாடியுள்ளார். அவை கொடு கொட்டி, பாண்டரங்

கம், காபாலம் என்பவை யாகும். திரிபுரம் எரித்தபோது அக் கொடுமைக்கு இரங்காமல், கைகொட்டி இறைவன் ஆடிய ஆடலுக்குக் "கொடு கொட்டி" என்று பெயர். கொடும் கொட்டி கொடுகொட்டி என்ருயிற்று. அழிந்தவற்றின் சாம்பலைப் பூசி நின்ருடும் ஆடல் "பாண்டரங்க" மாகும். பாண்டு வெள்ளை யெனப் பெறும். வெள்ளை அரங்கம் பாண்டரங்கம் என்ருயிற்று. எல்லா உலகங்களும் எல்லா உயிர்களும் இவற்றைப் படைத்துக் காக்கும் தொழிலை மேற்கொண்ட கடவுளர்களும் அழிகின்ற காலங் கடந்த கால இறுதியாகிய கடை ஊழியில் சிவபெருமான் ஒருவனே அழிந்த கடவுளரது தலை ஓடுகளைப் பூண்டு ஆடும் ஆட்டத்தைக் "காபாலம்" எனச் சொல்வார்கள். இவ் வாட்டம் உலகம் யாவும் அழிந்த காலத்தும் தனித்து நிற்கும் முழுமுதல் சிவபெருமானே என்பதை உணர்த்துவதோடு மீண்டும் எல்லாவற்றையும் தோற்றுவிப்பதும் அவனே என்பது விளக்கியதாயிற்று. கொடு கொட்டிக்குத் தாளத்தின் இறுதிக் கூருகிய சீரும், பாண்டரங்கத்திற்கு இடைக் கூருகிய தூக்கும், காபாலத்திற்கு முதற்கூருகிய பாணியும் துணைசெய்யும் என்று நச்சினர்க்கினியர் உரையால் அறியலாம்.

முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்துள் மாதவி என்னும் ஆடல் அழகி அரசரும் பெரு மக்களும் காண அரங்கேறிய காலத்து, மேற்சொல்லப்பட்ட ஆடல்களுள் முன்னைய இரண்டினையும் சிவபெருமான் ஆடிக் காட்டியதாக இளங்கோவடிகள் கூறுகிருர். ஆடல்களின் நிலைகளையும் சிறிது விளக்கியுள்ளார். அவ்வாடல்கள் அரங்கேறிய காலத்து அரசன் ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன்னும் ஒரு மாலையும் அவளுக்குப் பரிசிலாக அளித்தாகவும், அம் மாலையை ஆயிரத்தெட்டை ஆயிரத்தெட்டால் பெருக்கிவந்த எண் கழஞ்சுப் பொன் கொடுத்து வாங்கிக் கோவலன் அவள் கணவனைதாகவும் சிலப்பதிகாரம் கூறுகிறது. கொடு கொட்டி, பாண்டரங்கம் ஆகிய இரு ஆடல்களும் நின்றுகொண்டே ஆடும் ஆடல்கள் என்றும், கொடு கொட்டி நான்கு உறுப்புக்களால் ஆடும் ஆடல் என்றும், பாண்டரங்கம் ஆறு உறுப்புக்களால் ஆடும் ஆடல் என்றும், அதன் உரையால் அறிகிருேம்.

மாதவி இவ்வளவு கழுஞ்சு பொன் பெறுவதற்குக் காரணமாகிய இவ்வாடல்களில், முதல் ஆடலை, கூத்தச் சாக்கையன், தென்தமிழ் நாட்டு, செழுவில், கயல், புலி கொண்ட கொடியை இமையம்வரையிலும் நாட்டும்படி செய்து, வட ஆரியரை வென்று, இமையத்திலிருந்து கண்ணகி உரு அமைக்கக் கல்கொண்டு வந்த வீரனும், தன்னைப் பாடிய பரணர்க்கு உம்பற்காட்டையும் தன்மகனையும் பரிசிலாக ஈந்த கொடையாளனுமாகிய சேரன் செங்குட்டுவன்முன் ஆடினன். இவ்வாடல் இங்குத் கொட்டிச் சேதம் எனப் பெயர் பெறுகின்றது. இதன் இயல்பினை,

"திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
பழிதரு செங்கையில் படுபறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப் பருளவும்
செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்
பாடகம் பதையாது சூடகம் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார்குழை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்"

என வருவது கொண்டு உணரலாம். இறைவனது திருவுருவில் செம்பாதி (இடதுபாதி) உமையவள் பாகமாகும். அடிமுதல் முடிவரையில் உடல்முழுவதும் இடப் பங்கில் உள்ள உறுப்புகள் யாவும் அசைவற்றிருக்க, வலப்புறமே இவ்வாடல் முழுவதையுமே ஆடுதலின் அருமையையும், இளங்கோவடிகள் கூத்தச் சாக்கையன் ஆடல்மூலம் விளக்கியுள்ளார். இதனைக் கண்டு மகிழ்ந்தான் செங்குட்டுவன் என்பது சிலப்பதிகாரத்திலிருந்து விளங்குகிறது.

பண்டைய தமிழ் இலக்கியங்களில் இறைவன் திருக்கூத்து மேற்சொன்னவாறு விளக்கப்பட்டிருக்க, இஃது திருமூலர் திருமந்திரத்தில், திருக்கூத்து தரிசனத்தில், சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என ஐந்து தலைப்புகளில் காணப்படுகின்றது. சுந்தரக் கூத்து என்ற தலைப்பில், கொடுகொட்டி பாண்டரங்கம் ஆகிய கூத்துகள் அமைந்துள்ளன.

'சிவ நடனம்' (Dance of Siva) என்பதைப்பற்றி எழுதியுள்ள அருங்கலை அறிஞர் திரு. ஆனந்தகுமாரசாமி அவர்கள் இருநூற்றுக்கு மேற்பட்ட கூத்துகள் உள்ளன என்று கூறியுள்ளார்கள். இந் நூலில் "இமயமலை அந்திக் கூத்து" (Evening Dance in the Himalayas), "சுடுகாட்டுப் பைரவ அல்லது வீரபத்திரக் கூத்து), தில்லை நடராசரின் நாதாந்தக் கூத்து (Nathanatha Dance of Nataraja inTillai), ஆகிய மூவகைக்கூத்துகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. (தொடரும்)

---

## மதிப்புரை

சைவ சமய சரபம் : அண்மைக் காலத்தில் வாழ்ந்து மறைந்த அருட்பெருஞ் சான்றோராகிய **ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்**பற்றிச் சைவத் தமிழுலகம் நன்கறியும். அத்தியாச்சிரம சுத்தாத்வைத வைதிக சைவ சித்தாந்த ஞானபானு என எழுந்தருளித் திகழ்ந்திருந்த சுவாமிகள் இயலிசைத் தமிழ்க் கட்டுரைச் சுவைமல்கு பெருந் தோத்திர வடிவினவாகவும், தத்துவப் பெருவிளக்கான சாத்திர வடிவினவாகவும், சமயப் பொருளுண்மைகளை ஐயமறுத்து நிறுவும் சிறப்பினவாகவும், வேதாகம பாடியமென மிளிர்ந்து சொன்னயம் பொருணயம் தொனிநயம் எனும் பல நலமும் துறுமி விளங்குவனவாகவும், யாப்பிலக்கண இலக்கியங்களாகவும், அதி விசித்திரச் செய்யுளமைப்புப் பலவும் கொண்டு திகழ்வனவாகவும் இயற்றியுள்ள நூல்கள் பலப்பலவாகும். அவற்றுட் **சைவ சமய சரபம்** என்னும் இந்நூல் தலைசிறந்து நிற்பதொன்றாகும். மேல்நோக்காகக் காண்பவர்க்குச் சமய வேறுபாடுபற்றி எழுந்த நூல்போலத் தோன்றுமாயினும், நுணுகிக் கற்பவர்க்கு இஃதோர் அரிய ஆராய்ச்சி நூலாதல் புலப்படும் என்பதில் ஐயமில்லை.

சுவாமிகளின் விரிந்து பரந்த வடமொழிப் புலமையும் சிறந்துயர்ந்த வைணவ நூற்பயிற்சியும் வியக்கத் தக்கனவாக உள்ளன. இருக்கு, யசுர், சாமம் முதலிய வேதங்கள், கேநம், பிரச்நம், முண்டகம், மாண்டுக்யம், தைத்ரீயம், ஐதரேயம், சாந்தோக்யம், பிருகதாரண்யகம் முதலிய பலப்பல உபநிடதங்கள், பலவேறு ஸ்மிருதி புராண இதிகாசங்கள், நாலாயிரப் பிரபந்தம், வடகலை தென்கலைக் குருபரம்பரை

கள், யதிந்த்ர ப்ரணவ ப்ரபாவம், ஆழ்வாராசாரியர்கள் வைபவம், தென்னாசாரியப் பிரபாவம், தென்னாசாரியப் பிர பாவ கண்டனம், விஷ்ணுதத்வ விளக்கம், உடையவர் சூர்ண விளக்கம், ஆசார்ய ஹ்ருதயம், பிரமசூத்திரத் திரா விட பாஷ்யம், கூரேச விஜயம் பாஷண்டமத சபேடிகை விஷ்ணுபுராணம், வைணவர் பாகவதம், இராமாநுஜ பகவத் கீதாபாஷ்யம், இராமாநுஜ தசோபநிஷத் பாஷ்யம், வான் மீக ராமாயணம் முதலிய பற்பல வைணவ நூல்கள் ஆகிய வற்றினின்று பல வலிய சான்றுகளும் மேற்கோள்களும் இந்நூலிற் காட்டப்பெற்றிருக்கின்றன. ஆங்கில மேற் கோள்கள் சிலவும் நூலின் இறுதியில் தொகுத்துத் தரப் பட்டுள்ளன. **சமயத்துறையில் " அறிவுப் போர்கள் " நிகழ்ந்து வந்த ஒரு சூழ்நிலையில் தோன்றிய இந்நூல், இதுபோழ்து சமய வேறு பாடு கடந்து சமரசநோக்குடைய தக்க அறிஞர்கள் அனைவரும் பழைய கால நிலைகளையும் செய்திகளையும் தெரிந்துகொள்ளும் ஆராய்ச்சிக்காகப் படித்துப் பயன்கொளற்குரிய சிறந்த நூல்களுள் ஒன்றாகும்** எனச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்.

" பன்னி னாலும் பழத்தினு மின்சுவை
யென்னி னாறி யெனக்கே களிதரு
முன்னி னுன்னுமுன் னுவிடில் விட்டிடு
மென்னு ளீச னிருந்த வியற்கையே "

என்னும் **திருநாவுக்கரசர் தேவாரப்பாடல்** ஒன்று, சுவாமிகளால் இந்நூலின் வாயிலாக வெளிப்படுத்தப் பட்டுள்ளமை அறி ஞர் அனைவர்க்கும் பெருமகிழ்ச்சி விளைவிக்கும் செய்தி யாகும். ' இத் தேவாரப் பாசுரம் அச்சிடப்பட்ட பிரதி கள் பலவற்றுள்ளும் விடுபட்டுள்ளது. ஆயினும் **ஸ்ரீ தாயு மானுரால்** " உன்னிலுன்னும் என்ற உறுமொழியால் என் னிதயம் தன்னிலுன்னி நன்னெறியைச் சாருநாள் எந் நாளோ " எனும் தூக்கில், " அறிஞர் உரை " என்னும் தலைப்பில் எடுத்தாளப்பட்டுள்ளது " என்று சுவாமிகள் அடிக் குறிப்பு (310 பக்.) வரைந்துள்ளமை அறிந்தின்புறற் பாலது. 1908-ல் முதற் பதிப்பாக வெளிவந்த இவ்வரும் பெறல் நூல் சுவாமிகளின் மாணவர்களுள் ஒருவர் ஆகிய " குமாரச்சிவம் " எனப் பெயரிய திரு **தா. வேங்கடாசல முதலியார்** அவர்களின் பொருளுதவியால் இரண்டாம் பதிப் பாக (1959) வெளிவந்துள்ளது. வேண்டுவோர், அவர்தம்

முகவரிக்கு (1/34, ஆபீசு வேங்கடாசல முதலிவீதி திரு வல்லிக்கேணி, சென்னை-5.) எழுதிப்பெறலாம். 350 பக்கங்கள். திண்ணியகட்டு. விலை ரூ. 2—50.

அண்மைக் காலத் தருட்சான்றோர்
அருமைப் பாம்பன் சுவாமிகள்தாம்
வண்மைப் பெருக்கால் மகிழ்ந்தளித்த
மாண்பார் நூல்கள் பலவற்றுள்
தண்மைப் பொருள்கள் பலபொதுளும்
சைவ சமய சரபர்என்ப(து)
உண்மைத் திறஞ்சான் உயர்அறிஞர்
உவந்து படித்தற் குரியதொன்றே! —முருகவேள்.

மறைந்துபோன தமிழ் நூல்கள்: என்றுமுள நம் தென்றமிழ் மொழியில் இன்றளவும் தோன்றி மறைந்துள்ள தமிழ் நூல்களுக்கு அளவில்லை. கடல் கோள்கள், படையெடுப்புகள், அரசியற் சூழ்நிலைகள், மக்களின் அறியாமை, தீப்பிடித்தல், சிதல் அரித்தல் முதலிய பற்பல காரணங்களால் எத்துணையோ அரிய பெரிய தமிழ்நூல்கள் காலப் போக்கில் மறைந்துபோக நேர்ந்தமை "உள்ளின் உள்ளம் வேமே, உள்ளா திருப்பின் எம் அளவைத் தன்றே" என்றவாறுபோல நமக்குப் பெருவருத்தம் விளைவிப்பதாகும். "தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச் சாத்திரம்" என ஆசிரியர் திருமூலர் தாமும் இத்துயரச் செய்தியை மிக்க ஆராமையுடன் குறிப்பிடுகின்றார். நூல்கள்தாம் மறைந்து போயின என்றால், அவற்றின் பெயர்களும்கூட நம்மிற் பெரும்பாலார்க்குத் தெரிந்துகொள்ள முடியவில்லை. "பேரும் தெரிந்திலம் என்செய்குவேம் இந்தப் பேதையமே" என நாம் வருந்தும் நிலையில், "வழிவழிப் பெயரும் மாள" மறைந்துபோன தமிழ் நூல்கள் வரம்பில. அடங்காதனவாகும்.

அவற்றுள் ஏறத்தாழ நூற்றெண்பது (180)க்கு மேற்பட்ட அரிய தமிழ் நூல்களைப்பற்றித் தாம் பல ஆண்டுகளாகச் செய்த போதரும் ஆராய்ச்சியிற் கண்டுணர்ந்த குறிப்புக்கள் அனைத்தையும் சிறந்த முறையில் ஒழுங்கு படுத்தி உருவாக்கி, நாமெலாம் "பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒப்ப" மகிழும்படி, அறிஞர் **திரு. மயிலை - சீனி. வேங்கடசாமி** அவர்கள் இந்நூலின் வாயிலாக அளித்துள்ளார்

கள். "என் குடும்பத்தில் இரண்டு அருமைக் குழந்தைகள் மறைந்துவிட்டபோது, தமிழிலக்கியக் குடும்பத்திலும் சில குழந்தைகள மறைந்து போனதை யான் கண்டேன். என் மனத்தில் அப்போது புதியதோர் எண்ணம் தோன் றிற்று. தமிழன்னை எத்தனைக் குழந்தைகளை—தமிழ் நூல் களை—இழந்துவிட்டாள் என்பதைக் கணக்கிட வேண்டும் என்னும் எண்ணந்தான் அது..." என நூலாசிரியர் தமது முன்னுரைக்கண் எழுதியிருப்பது மிக்க உருக்கத்தினை யுண்டாக்கி, "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான்புகில் அளவில்லை" எனவரும் திரு மொழியை நினைப்பிக்கின்றது.

முனைவர்-திரு. **மு. வரதராசனார்** அவர்கள் கூறுவதுபோல, இவ்வறிஞர் பெருமகனார் எளிய வாழ்வினை மேற்கொண்டு அமைதியாக இருந்து, உயரிய தொண்டாற்றும் இயல் பினர். செய்வன திருந்தச் செய்யும் இயல்பினர்! தமி ழிலக்கிய ஆராய்ச்சிக்கு உறுதுணையாக இவர் அளித் துள்ள இறைவனின் எழுவகைத் தாண்டவங்கள், தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், மகேந்திரவர்மன், நந்திவர்மன், சமணமும் தமிழும், பௌத்தமும் தமிழும், கிறித்தவமும் தமிழும் முதலிய அரிய ஆராய்ச்சி நூல்கள் அனைவரும் போற்றத்தக்கன. மறைந்துபோன தமிழ் நூல்களின் பெயர்களையேயன்றி, அவற்றில் இஞ்ஞான்று எஞ்சி நின்று கிடைக்கும் பகுதிகளையும் ஒரு சேரத் திரட்டி வழங்கியுள்ளமை, இவர் தமிழ் மக்களுக்குச் செய்த மாபெருந் தொண்டாக மதிக்கற்பாலது. 332 பக்கங்கள், விலை ரூபா ஆறு (6). கிடைக்குமிடம்: பாரி நிலையம், 52, பிராட்வே, சென்னை - 1.

மறைந்து போன தமிழ்நூல்கள்
மற்றின் னின்ன எனவிளக்கிச்
சிறந்த அறிஞர் திரு.மயிலை
சீனி வேங்க டாமிஅண்ணல்
நிறைந்த உழைப்பும் ஆராய்ச்சி
நெறியும் விளங்கத் தொகுத்தளித்தார்!
உறழ்ந்த புலமை, பண்புநலன்
ஒளிரும் இவர்தொண் டுயர்ந்தவெல்க! —முருகவேள்.

———

பிரசாரக் கூட்டம் 2-8-59 ஞாயிற்றுக்கிழமை பாடி என வழங்கும் திருவலிதாயத்தில் நடைபெறும். அன்பர்கள் கலந்து கொள்வார்களாக.

---

## சமாஜச் செய்திகள்

மாணிக்கவாசக சுவாமிகள் ஆனி மக விழா 12-7-59 ஞாயிறன்று பாலசுப்பிரமணிய பக்தஜனசபையில் சமாஜத்தின் சார்பில் கொண்டாடப்பெறும்.

சமாஜத் தேர்வுகள் : சமாஜம் நடத்தும் இளஞ் சைவப் புலவர் சைவப் புலவர் தேர்விற் கலந்துகொள்ள விரும்புவோர் முறையே மூன்று ரூபாயும், நான்கு ரூபாயும் அனுப்பித் தமது பெயர்களை விரைவிற் பதிவுசெய்து கொள்ளுதல் வேண்டும். அதற்குரிய கடைசி தேதி 15—8—59 ஆகும். தேர்வுகள் நவம்பர் மாதம் மூன்றும் ஞாயிற்றுக்கிழமையில் நடைபெறும். டிசம்பர் மாதம் நிகழும் சமாஜ விழாவில் தேர்ச்சி பெற்றவர்க்குப் பட்டங்கள் வழங்கப்பெறும். இத்தேர்வுகளுக்குரிய பாட திட்டங்கள் வருமாறு :—

இளந் சைவப் புலவர் தேர்வு :—I இலக்கியம்:(1) திருக்குறள் அறத்துப்பால் பரிமேலழகர் உரையுடன். (2) திருநாவுக்கரசர் புராணம் முழுவதும். (3) சமயக் கட்டுரைகள் (பண்டிதமணி. கதிரேசஞ் செட்டியார்). (4) முருகன் அல்லது அழகு (திரு. வி. க.) II சைவ சாத்திரம்: திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், உண்மை விளக்கம்.

சைவப் புலவர் தேர்வு :—I இலக்கியம்: (1) திருஞானசம்பந்தர் புராணம் முழுவதும் (2) திருக்கோவையார் 200 பாடல்கள் (பேராசிரியர் உரையுடன்) (3) திருவாசகம் திருச்சதகம் 100 பாடல்கள் (பண்டிதமணி உரையுடன்) (4) சைவ சித்தாந்த ஞானபோதம் (மறைமலை அடிகள்) (5) திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே (க. வச்சிரவேல்முதலியார் பி.ஏ., எல்.டி.) II சைவசாத்திரம்: (1)சிவஞான போதச் சிற்றுரை (சிவஞான முனிவர் உரை) (2) சிவஞான சித்தியார் சுபக்கம் (சிவஞான முனிவர் உரை) (3) சிவப்பிரகாசம் (மதுரைச் சிவப்பிரகாசர் உரை.)

---

Regd. M. 2330 "SIDDHANTHAM" Vol. 32—No. 7

# திருமணம்

நமது 'சித்தாந்தம்' உதவிப் பத்திராதிபர் திரு. மு. நாராயணசாமி அவர்களின் திருமகன் நா. அண்ணாமலை, எம்.ஏ. அவர்களுக்கு ஆர்க்காடு - தோல்ஷாப் - திரு. ஏ. பி. பாலசுந்தர முதலியார் அவர்களின் செல்வி அம்பிகாவை இல்வாழ்க்கைத் துணையாக்க உறுதி செய்துள்ளவண்ணம், ஆர்க்காடு சுந்தர முதலியார் தெரு 10-வது எண்ணுள்ள மணமகன் இல்லத்தில் திருமண விழா 13-7-1959 திங்கட்கிழமையன்று நடைபெறும். மணமக்கள் இனிது இல்லறம் நடத்தச் சமாஜம் வாழ்த்துகிறது.

நமது சமாஜ உதவிக் காரியதரிசி மா. ப. தியாகராஜ முதலியார் பி.ஏ., அவர்களது தமக்கையின் புதல்வர் M. S. முத்து, M.Sc அவர்களுக்கும் சென்னை ஆசிரியர் கல்லூரித் தலைவர் திரு. பெருமாள் முதலியார் எம்.ஏ., எல்.டி., அவர்களின் திருமகள் சாந்தகுமாரிக்கும் 26-6-59 வெள்ளிக்கிழமையன்று திருமணம் சிறப்புற நடந்தது. மணமக்கள் இனிது இல்லறம் நடத்தச் சமாஜம் வாழ்த்துகிறது.

சேக்கிழார் விழா :—நமது சமாஜத்தின் சார்பில், 14-6-59 ஞாயிறன்று இராயப்பேட்டைப் பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் இராவ்சாகிப் - திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமையில் சிறப்புறக் கொண்டாடப்பெற்றது. "திருக்கோயில்" ஆசிரியர் திரு. ஜி. கல்யாணம் பிள்ளை எம்.ஏ., புலவர் முருகவேள் எம்.ஓ.எல், சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி.ஏ., எல்.டி., ஆகியோர் முறையே "சேக்கிழார் புலமைச் சிறப்பு", "திருத்தொண்டத் தொகை", "சேக்கிழாரும் திருமுறைகளும்" என்னும் பொருள்கள்பற்றி அரிய சொற்பொழிவுகள் ஆற்றினர். தலைவர் அவர்களின் முடிவுரைக்குப்பின் இறைவணக்கத்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi, Edited by Pulavar Murugavel, M.O L. & Published by S. Satchidanandam Pillai. B A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.